# ஜெய் விசால் பத்ரி

"நீயா! பத்ரி யாத்திரை போகப் போகிறுயா? ஆச்சரியமாக இருக்கிறதே!" என்று மூக்கில் விரல் வைத்தவர்கள் உண்டு.

அவர்கள் என்ன, எனக்கே ஆச்சரியம்தான். யாத்திரை பூர்த்தியாகி இரண்டு வாரத்துக்கு மேல் ஆகிவிட்ட பின்னரும் நான் இன்னும் மூக்கிலிருந்து விரலை எடுக்கவில்லை என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்.

உண்மையைச் சொல்லி விடுகிறேன். நான் சில பழக்க வழக்கங்கள் உடையவன். அவற்றில் நல்லவையும் உண்டு. அல்லாதவையும் உண்டு. தவிரவும் எனக்குக் கொஞ்சம் சர்க்கரை வியாதி. தினமும் ஊசி போட்டுக் கொள்ள வேண்டும். போகிற இடத்தில் வைத்திய வசதி கிடைக்குமா? ஆகார வசதிகள் எப்படியோ? அலைச்சல் தாங்குமா?

ஆகவே தயங்கினேன்.

என் மனைவி முடுக்கினுள். எனக்குச் சேரும் புண்ணியத்தில் தனக்கும் பங்கு கிடைக்கும் என்று ஆசை போலும். அல்லது, பிக்கல் பிடுங்கல் இல்லாமல் பதினைந்து நாளாவது நிம்மதியாக இருக்கலாம் என்ற நோக்கமோ என்னவோ. "யோசிக்க வேண்டாம். நண்பர்களோடு போனால்தான் உண்டு," என்பது அவள் கருத்து. வீட்டிலிருக்கும் என் கடைசிப் பெண்ணும் தைரிய மூட்டினுள்.

அப்புறம் என்ன? வீர திலகம் அணிந்து கொண்டு, தகுந்த முஸ்தீபுகளுடன் கோஷ்டியில் கலந்து விட்டேன்.

பத்ரிநாதன் அழைக்கும் போது யாரே தடை செய்ய முடியும்?

எங்களைத் தாங்கிச் செல்லும் பெருமை, செப்டம்பர் பதினாம் தேதி இரவு புறப்படும் கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரசுக்குக் கிடைக்கப் போகிறதா? அல்லது மறுநாள் காலை புறப்படும் லிங்க் எக்ஸ்பிரசுக்கு வாய்க்கப் போகிறதா? கடைசி நிமிடம் வரை போராட்டம். இறுதியில் அதிர்ஷ்டம் பிந்தின வண்டிக்குத் தான் அடித்தது. [கிராண்ட் டிரங்க்கைக் காட்டிலும் லிங்க் எக்ஸ்பிரஸ் சில மணி நேரம் பிந்திச் செல்கிறது]

நண்பர்களும் உறவினர்களும் வழியனுப்பிக் கொடுக்க, உற்சாகமான பஜனை கோஷத்துடன்



அடேயம்மா! எப்படிப்பட்ட வ

# ஜெய் கேதார் மகராஜ

ஒவ்வொருவரும் தம் வாழ்நாளைக்குள் ஒருமுறையாவது தரிசித்துவிட வேண்டும் என்று விரும்பக்கூடிய இரண்டு புனித தலங்கள் இமயத்தின் மடியில் இடம் பெற்றிருக்கின்றன:

கேதாரிநாத், பத்ரிநாத்.

இந்த ஆண்டு இரண்டு லட்சம் பேர் பத்ரிக்குச் சென்று வந்ததாகவும் 99,000 பேர் கேதார் போய் வந்ததாகவும் பத்திரிகைகளில் கணக்கு வெளியாகியிருக்கிறது.

அண்மையில் நண்பர்களுடன் அந்தத் தலங்களுக்குச் சென்று வந்த ஓவியர் ரவி தம் அனுபவங்களைக் கூறுகிறார்.



கள்! எத்தனை ஆபத்தான பாதைகள்!

பதினைந்தாம் தேதி ஏழுபேர் புறப்ப
டோம். நண்பர்களின் இசைத் தி
னைக் கவனித்தபோதுதான், கிராண்
டிரங்க் எக்ஸ்பிரஸ் எங்களைத் தட்டி
கழித்த காரணத்தை ஒருவாறு
ஊகிக்க முடிந்தது.

பதினேழாம் தேதி கால
டில்லி.

கரோல்பாகில், வேண்டி
வர்கள் வீட்டில் மாலைவரை தங்
னோம். பக்த கோஷ்டியல்லவா? ஏ
உபசாரம். அருமையான விருந்
படைத்தார்கள். சாதாரணமாகவே
ஒரு வெட்டு வெட்டியிருப்போம்
அடுத்த நல்ல சாப்பாடு பதினைந்
நாள் கழித்துத்தான் என்ற உணர்வு
வயிற்றின் சுற்றளவை இன்னும் சற்
அதிகமாக்கித் தந்தது. உண்ட களை
புடன் ஆசி கூறிவிட்டு இரவு ஹரித்
வாருக்குப் புறப்பட்டோம்.

புகழ் பெற்ற பெருமா
செட்டி சத்திரத்தில் ஜாகை. கங்கை
நதி சத்திரத்தின் புறக்கடைப் பகு
யில் வீட்டுக்குள்ளேயே தவழ்ந்
வந்து தொட்டுக் கொண்டு ஓடுகிறது
வீட்டுப் புறக்கடையில் படித்துறை
அவசியமானால் குளிப்பது துவைப்ப
எல்லாம் அங்கேயே செய்து கொள்
லாம். மறு கரையில், அகலமான அ

கிய நடைபாதை அமைத்திருக்கிறார்கள். காவார, கண்ணாற உவ்வ அருமையான இடம்.

பிரம்ம குண்டத்தில் கங்கையை ஒரு பக்கமாகப் பிரித்து வேகத்தைச் சற்றே குறைத்துப் பாதுகாப்பான வின்ன கட்டமாக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. நீரோட்டமுள்ள நீச்சல் குளம் போல அந்தக் கட்டம் விளங்கிறது. அற்புதமான குளியல். குளிக்கும்போது மீன்கள் இலவசமாகக் கால்களைச் சுத்தம் செய்கின்றன. பிரயாணை அலுப்புத் திரக் குளித்துவிட்டு அன்று இரவே ரிஷிகேசம் புறப்பட்டோம். ஹரித்துவாரிலிருந்து மேலே 15 மைலில் ரிஷிகேசம்.

அந்தக் காலத்தில் நடந்தே பத்ரி சென்றார்கள். வேறு வழியில்லை. பிறகு, 40 மைல் வரை ரஸ்தா போட்டு, பஸ்ஸில் போகும் வசதி ஏற்பட்டது. (1937'ல் திரு. அவிநாசி லிங்கம் செட்டியார் தேவப் பிரயாகை வரைதான் பஸ்ஸில் சென்றிருக்கிறார் என்பது அவரது 'திருக்கேதார யாத்திரை' என்ற புத்தகத்திலிருந்து தெரிகிறது.( இப்போது நேரே பத்ரிக்கே (183 மைல்) பஸ் உண்டு. கேதார் பாதையில் மட்டும், சுமார் 11 மைலுக்கு வண்டிப் போக்குவரத்துக் கிடையாது. ஒற்றையடிப் பாதை மாதிரிதான்.

---



## கேயா ஜியா?

சடகோபன் என்ற பேரை ஆங்கிலத்தில் எழுதும்போது Satakopan என்றுதான் எழுத வேண்டும் Satagopan என்று எழுதக் கூடாது என்று சொல்கிறார் திரு. வேழ்குடி வரதாச்சாரி அவர்கள். ஆழ்வார் திருநகரியில் நடத்திய திருவாய்மொழி சொற்பொழிவில் அவர் கூறினார் இதை.

எல்லாக் குழந்தைகளும் பிறக்கும்போது அழும். அழுவதற்குக் காரணம் வாயுவின் அழுத்தம். நம்மாழ்வார்(சடகோபன்) பிறக்கும்போது அழவில்லையாம். அவருடைய கோபத்திற்குப் பயந்து வாயு சும்மா இருந்தாராம். பெற்றோர்கள் அதனால் 'வாயுவைக் கோபித்தவன்' அதாவது சடகோபன் என்று பெயரிட்டார்கள். Satakopan என்று எழுதினால் தான் கோபித்தவன் என்ற பொருள் வரும் Satagopan என்று எழுதினால் வாயுவைக் காத்தவன் என்ற பொருள் வரும்.

—வி. சுப்புலட்சுமி

---

இன்னும் சில வருடங்களில், கேதாருக்கும் நேரே பஸ் போக ஏற்பாடு செய்து விடுவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

அதிர்ஷ்டவசமாக, எங்களுக்கு வாடகைக் கார் கிடைத்தது. அதைக் காட்டிலும் அதிர்ஷ்டம், திறமை மிக்க டிரைவர் (அவர் பெயர் சுர்வீர் சிங்) கிடைத்தது. அவர் திறமைக்குச் சான்று: நாங்கள் குறித்த நாளைக்குள் ஒழுங்காக ஊர் திரும்பி வந்தோமே?

ரிஷிகேசத்தில் திருப்பதி தேவஸ்தானத்தாரின் ஆசிரமம் மிகவும் வசதியாயிருக்கிறது. புதிதாக, தெற்கத்துப் பாணியில் எழுப்பப்பட்ட கோயிலில் வெங்கடேசப் பெருமாளைத் தரிசனம் செய்தோம். காலையில் அங்கே கங்கையில் குளித்துவிட்டு 11 மணிக்குப் பயணமானோம்.

ரிஷிகேசத்திலிருந்து மலைப் பாதை. அடர்ந்த வனங்கள். ஒரு பக்கம் நதி மறு பக்கம் வானோங்கிய மலைகள். கொள்ளை அழகு! புதிய உலகத்துக்குப் போகும் உணர்ச்சி ஏற்பட்டது.

தேவிப் பிரயாகைத் தாண்டியதும் ஸ்ரீநகர். (இது காஷ்மீர் ஸ்ரீநகர் அல்ல.) அங்கே சிற்றுண்டி சாப்பிட்டோம். பருப்புகள்—சப்பாத்தி—பால் தான் அங்கே கிடைக்க கூடிய ஆகாரம். மாலை நாலரை மணிக்கு ருத்திரப் பிரயாகை அடைந்தோம்.

கணக்கு எனக்கு அவ்வளவாக வராது. இருந்தாலும் ஓரளவு முயற்சி செய்து பார்க்கிறேன். ஹரித்துவாரிலிருந்து ரிஷிகேசம் 15 மைல். அங்கிருந்து ருத்ரப்பிரயாகை 77 மைல்.

ருத்ரப்பிரயாகை ஒரு முக்கியமான சந்திப்பு. மந்தாகினி கங்கையும் அலகநந்தா கங்கையும் சந்திக்கும் இடம் அது. அது மட்டுமல்ல, கேதார்— பத்ரி சாலைகளில் சந்திப்பும் அதுதான். இடது பக்கம் போனால் சுமார் 60 மைலில் கேதார்நாத். வலது பக்கம் போனால் சுமார் 86 மைலில் பத்ரிநாத்.

செப்டம்பர் மாதமாயிருந்தாலும் நல்ல வெய்யில் கொளுத்தியது.

பத்ரிக்குப் புறப்படுமுன் நாங்கள் ஆலோசனை கேட்ட நண்பர் எங்களைக் கம்பளி உடைகளும் போர்வைகளும் எடுத்துப் போகச் சொன்னதால் அவைகளை எடுத்து வந்திருந்தோம். 'இவ்வளவு வெய்யில் அடிக்கிறது. என்னத்துக்காக இத்தனை

கம்பளி உடைகளைச் சுமந்து வந்தோம்,' என்று எண்ணினேம். சென்னையிலிருந்து எடுத்து வந்தது போதாதென்று டில்லியில் கம்பளி ஸாக்ஸ்களும், பிரத்தியேக பூட்ஸ்களும் வேறு வாங்கி மூட்டை சேர்த்துக்கொண்டோம். 'இருக்கிற பந்தங்கள் போதாதென்று, டெல்லி பந்தமும் சேர்ந்ததே,' என்று அங்கலாய்த்துக் கொண்டார் ஒரு நண்பர். (ஆனல் கம்பளியின் அருமை பின்னலல்லவா தெரிந்தது!)

டாக்ஸி டிரைவர் ஒரு தகவலைச் சொன்னர்:

'வீட்டுக்கு வந்த மருமகள்' பட விழாவில் பேசிய எம். ஜி. ஆர் அவர்கள் தயாரிப்பாளரை நோக்கி, "நீங்கள் நல்ல படங்கள் எடுப்பதைப் பாராட்டுகிறேன். ஆனல் உங்கள் பெயரை 'சுப்ரமணிய ரெட்டியார்' என்று போடாமல் 'சுப்பிரமணியன்' என்றே போடுங்கள். 'ரெட்டியார்' என்பது ஜாதியைக் குறிக்குமல்லவா?" என்ருர்.

அடுத்துப் பேசிய 'சோ' அவர்கள், "தமிழில் நல்ல படங்களை எடுக்க சுப்பிரமணிய ரெட்டியார் எப்பொழுதும் 'ரெடி' யாக இருக்கிருர். எனவே, இனி அவர் தன் பெயரை சுப்பிரமணிய 'ரெடி' யார் என்று வைத்துக் கொள்ளலாம்," என்று யோசனை கூறினர்

—பாரத்வாஜன்

ஜாதி



'கேதார்நாத் போவதாய் இருந்தால் இப்போதே கேதார் போய் விடலாம். உங்கள் அதிருஷ்டவசத்தினல் பாதைகள் சேதாரமில்லாமலும் சரிவுகள் இல்லாமலும் நன்ருக இருக்கின்றன. ஒரு நாளைக்கு இருப்பது போல் மறுநாளைக்கு அவை இருக்காது," என்று அவர் கூறினர். இருந்தும் சிலருக்குத் தயக்கமாகவே இருந்தது.

நாங்கள் சென்னையிலிருந்து புறப்படும்போது எங்களிடையே இரண்டு கட்சிகள் இருந்தன. ஒரு கட்சியினர் பத்ரியோடு திரும்பிவிடலாம் என்று கூறினர். இன்னொரு கோஷ்டி, அவ்வளவு தூரம் பத்ரிக்குப் போய்விட்டுக் கேதார்நாத் பார்க்காமல் வருவதாவது என்று கூறினர்கள்.

இப்போது, டிரைவர் அளித்த தைரியத்தில், முதலில் கேதாருக்கும், பிறகு பத்ரிக்கும் போவதென்று முடிவு செய்தோம்.

ருத்ரப்பிரயாகையிலிருந்து குப்தகாசி என்ற ஊரை அடைந்த போது மாலை மணி 6 ஆகிவிட்டது.

அடேயம்மா, எப்படிப்பட்ட வளைவுகள்! எத்தனை ஆபத்தான பாதைகள்! சேர்ந்தாற்போல் நூறு கஜ தூரம் கூட நேரான—ஸ்ட்ரெய்ட்டான—பாதை இல்லை. அத்தனை வளைவுப் பாதையில் படுவேகமாக டிரைவர்கள் ஓட்டியது எங்களை மெய்சிலிர்க்க வைத்தது. எங்கே நாங்கள் பாதி வழியில், 'வேண்டாம்பா, ரொம்ப ரிஸ்க்காக இருக்கும் போலிருக்கிறது,' என்று வாபசாகிவிடுவோமோ, என்று அவர்கள் பயந்து, எங்களைச் சீக்கிரம் கொண்டு போய்ச் சேர்த்துவிடுவது என்ற உறுதியில் அப்படிப் படுவேகமாக ஓட்டியிருப்பார்களோ என்றுகூட எனக்குத் தோன்றியது.

ராத்திரி பி டபிள்யூ டி விருந்தினர் விடுதியில் தூங்கினேம். தூங்கினேம் என்பதைக் காட்டிலும் பாதி ராத்திரிக்கு மேல் விழி விழி என்று விழித்தோம் என்று சொல்வதே பொருத்தம்.

எங்கள் கோஷ்டியில் இருந்த இளைஞர் ஒருவருக்கு வயது 70'க்கு மேல் இருக்கும். தள்ளாமையைப் புறக்கணித்துவிட்டுத் துணிச்சலுடன் யாத்திரைக்குக் கிளம்பியவர் அவர்.

இரவு கொஞ்சம் கண்ணயர்ந்திருப்பேன்.

"சார்! சார்! எங்கே போகிறீர்கள்?" என்ற குரல் என்னை எழுப்பிற்று. அந்தப் பெரியவரை நண்பர் ஒருவர் கேட்டுக் கொண்டிருந்தார்.

'பசித்துப் புசி,' என்பார்கள். அன்று காலை, அளவுக்கு மீறிப் பசி எடுத்தபின் சாப்பிட்டதன் விளைவாக, முதியவரின் வயிற்றை என்னவோ செய்யத் தொடங்கிவிட்டிருக்கிறது.

[illegible]ருக்குத் தொந்தரவு கொடுக்கக் கூடாது என்பதற்காக ஓசைப்[illegible] [illegible] அடிக்கடி 'குளியல்' அறைப்[illegible] போய் வந்திருக்கிருர்.

முதுமை காரணமாக. விரைவில் சோர்ந்து போய்விட்டார். சன்னாறும் போது மேலே எழுப்பிய அலறல் அவரைக் காட்டிக் கொடுத்து விட்டது. 'எனக்கு ஒன்றுமில்லை,' என்று அவர் திரும்பத் திரும்பச் சொன்னாலும் எங்களுக்கெல்லாம் கவலையாகப் போய்விட்டது. கைவசம் கொண்டு போயிருந்த மருந்துகளைக் கொடுத்து ஒரு வழியாக அப்போதைக்கு நிலைமையைச் சமாளித்தோம் என்று வைத்துக் கொள்ளுங்கள்.

பொழுது விடிந்தது. குப்தகாசியிலிருந்து கிளம்பி, ஸோன்பிரயாக் என்ற இடத்துக்கு ஒன்பதரை மணிக்குப் போய்ச் சேர்ந்தோம்.

ஸோன்பிரயாக்கிலிருந்து கேதார்நாத்துக்கு 12 மைல். இந்தத் தூரத்தை நடந்துதான் செல்ல வேண்டும். குதிரை அல்லது தண்டி வசதிகளும் உண்டு.

ஐந்து பேர் குதிரைகளில் செல்வது எனவும், இரண்டு பேர் தண்டியில் செல்வது எனவும் ஏற்பாடாயிற்று. தூக்குச் சட்டங்கள் உள்ள ஒரு நாற்காலிதான் தண்டி. அதை ஆறு பேர் தூக்கி வருவார்கள். குதிரையைவிட இதற்கு மூன்று நான்கு மடங்கு வாடகை அதிகம். 'கண்டி' என்று ஒருவகை. ஒரு கூடையில் ஒரு நபரை உட்கார வைத்து முதுகில் தாங்கிச் செல்கிற கூலியாட்களும் இருக்கிறார்கள்.

ஒரு தண்டி தூக்கத்தான் ஆள் கிடைத்தனர். மற்றொரு தண்டிக்கான ஆள் சேகரிக்க சுமார் மூன்று மைல் தொலைவிலிருந்த கிராமத்துக்குத் தாக்கீது அனுப்பப் பட்டது. நாங்கள் ஈ ஓட்டிக் கொண்டும், ஏதாவது கொறித்துக் கொண்டும் பொழுதைக் கழித்துக் கொண்டிருந்தோம்.

அப்போதுதான், தண்டியில் உட்கார்ந்திருந்த பெரியவரின் முகத்தைப் பார்த்தோம். அதில்தான் எவ்வளவு களைப்பு! பலவீனம்! இப்போது எங்களுக்கு வயிற்றைக் கலக்க ஆரம்பித்து விட்டது.

உடனே ஒரு ரகசியக் கூட்டம் போட்டோம்.

உடம்பு சரியில்லாதவர் மலைப் பயணத்தைத் தாங்குவாரா? விவாதம் நடந்தது. என்ன செய்வதென்று புரியவில்லை.

கூட வந்தவரைக் கீழே விட்டு விட்டு நாங்கள் மட்டும் மேலே போனால் கேதாரிநாதன் எங்களைக் கேட்கமாட்டாரா, 'எங்கே உங்கள் கோஷ்டியில் இன்னும் ஒருத்தரைக் காணோம்?' என்று?

கீழே விட்டுச் செல்லலாம் என்றால் அவரை யார் பார்த்துக் கொள்வார்கள்?

கோஷ்டியில் ஒவ்வொருத்தரும் 'பரவாயில்லை. நான் பார்த்துக் கொள்கிறேன். நீங்கள் போய் வாருங்கள்' என்று விட்டுக் கொடுத்துத் தியாக மனப்பான்மையோடு பேசினாலும் உள்ளுக்குள் இத்தனை தூரம் வந்து கேதாரைத் தரிசிக்கும் பாக்கியம் இல்லாமல் போய்விடுமோ என்ற வருத்தமும் ஏக்கமும் அவரவர்களுக்கு ஏற்படவே செய்தது.

தவிரவும், ஸோன்பிரயாக்கில் குடிசைகளும், கூடாரங்களும் இருந்தனவே தவிர, நோயாளி தங்குகிறாற் போல் ஒரு கட்டிடம்கூட இல்லை.

கடைசியில் எங்கள் டாக்ஸி டிரைவர் பிரச்னையைத் தீர்த்து வைத்தார்.

(தொடரும்)



''தீபாவளிக்கு உன் மாமனார் வீட்டில் நல்ல வரவேற்பு கிடைத்ததா?''

''அடேயப்பா! ஸ்டேஷனில் என்னை வரவேற்கக் குட்டி மைத்துனன் மட்டும் வந்தான்! ஆனால் ஊருக்குத் திரும்பறப்போ வழி அனுப்ப ஸ்டேஷனுக்கு என் மாமனார், மாமியார், என் மனைவி, மைத்துனன்மார்கள், மைத்துனிகள் எல்லோரும் வந்திருந்தார்கள்!''

# பத்ரீ! மகராஜ்!

ரவி

"ஏன் கவலையாக இருக்கிறீர்கள்?" என்றான் டாக்ஸி டிரைவர்.

"பெரியவருக்கு உடல்நிலை சரியில்லை," என்று விளக்கினோம். "அவரை இங்கே விட்டுப் போக வசதி கிடையாது. எங்களுடன் அழைத்துச் செல்லலாம் என்றால் அவர் நிலைமை அதற்கு இடம் கொடுக்குமா என்று சந்தேகமாக இருக்கிறது."

"அவர் உடம்புக்கு என்ன?"

"வயிற்றுப் போக்கு. ஆகாரம் சாப்பிட்டு இருபத்துநாலு மணி நேரம் ஆகிவிட்டதால் ரொம்ப பலவீனமாக இருக்கிறார்."

"மருந்து கொடுத்து வருகிறீர்கள் அல்லவா?"

"ஓ."

"அப்புறம் என்ன? கேதார் மஹராஜ்மீது பாரத்தைப் போட்டுவிட்டுப் புறப்படுங்கள். எல்லாம் சரியாய்ப் போய்விடும். யோசிக்கவே வேண்டாம். ஹூம், புறப்படுங்கள்! புறப்படுங்கள்! இப்போதே கிளம்பினால்தான் பொழுது சாயும்போதாவது கேதாரை அடையலாம்."

நினைத்துப் பார்த்தால் வேடிக்கையாகத்தான் இருக்கிறது. "தன்னை வந்து தரிசிக்குமாறு எவன் உள்ளுக்கிருந்து நம்மைத் தூண்டிவிட்டானோ, இவ்வளவு சௌகரியமாகச் சென்னையிலிருந்து ஸோன்பிரயாகை வரை யாத்திரை செய்ய எவன் வசதி செய்து கொடுத்தானோ, அவன் இந்தக் கடைசிப் பதினொரு மைல்களைக் கடக்கும் போதா நம்மைக் கைவிட்டு விடப் போகிறான்?' என்ற ஞானம், நம்பிக்கை, எங்களுக்கு முதலில் உதிக்கவில்லை. அதைப் போதிக்க வயதிலும், படிப்பிலும் பொருளாதார நிலையிலும், எங்களைவிட மிகவும் இளையவனான ஒரு டாக்ஸி டிரைவர் வரவேண்டி இருந்திருக்கிறது.

இப்படிச் செய்யலாமா அப்படிச் செய்யலாமா என்று குழம்பியபடி ஒரு தீர்மானத்துக்கும் வர முடியாமல் திண்டாடும்போது ஏற்படுகிற தவிப்பு இருக்கிறதே, அதைவிட ஆளைக் கசக்கிப் பிழிந்து உதவாக்கரையாக்கக் கூடிய வியாதி வேறு என்ன இருக்க முடியும்? பெரியவரின் வயிற்றுக் கோளாறு அவரது உடலைத்தான் பாதித்திருந்தது. எங்கள் சந்தேகங்களோ எங்களைக் கோழைகளாகவே ஆக்கிவிட்டிருந்தன. ஒரே விநாடியில் டாக்டர் சுர்வீர் சிங் எங்களைக் குணப்படுத்திவிட்டான்.

சோன்பிரயாகையில் ஒரு கீதோபதேசம்!

புத்துணர்ச்சி பெற்றுப் பயணத்தைத் தொடங்கினோம்.

பெரியவர் மெள்ளத் தண்டியில் அமர்ந்தார். இருதய நோய்க்கார நண்பர் மற்றொரு தண்டியில் உட்கார்ந்தார். நாங்கள் குதிரைகள் மீது ஏறிக்கொண்டோம். அதாவது மற்ற நால்வரும் ஏறிக்கொண்டார்கள்.

என் விஷயம் அப்படியல்ல. எனக்கும் என் குதிரைக்காரனுக்கும், எனக்கும் என் குதிரைக்கும் மும்முனைப் போராட்டம். என்னை ஏற்றுவதற்காகக் குதிரைக்காரன் என் பக்கமிருந்தால் குதிரை என் பக்கம் இருக்காது. குதிரை என் பக்கம் வந்தால் குதிரைக்காரன் எங்கேயோ இருப்பான். இரண்டு பேரும் ஒத்துழைக்கும்போது நான் ஏறச் சிரமப்பட்டுக் கொண்டிருப்பேன். யார் பேச்சையும் யாரும் கேட்பதாக இல்லை. கடைசியில், எங்களுக்குள் ஏதோ ஒருவிதமாகப் போர் ஓய்வு ஏற்பட்டதன் விளைவாக, ஒரு கட்டைச் சுவரில் ஏறி நின்று குதிரை மீது ஆரோகணித்தேன். உயர விஷயத்தில் எனக்கு ஒரு குறைவுமில்லை. ஆனால் கால் வைத்துக் கொள்கிற வளையமோ, சேணத்திலிருந்து மிகவும் குட்டையான வாரில் தொங்கிக் கொண்டிருந்தது. கல்லூரி மாணவன் மூன்று சக்கர வண்டி ஓட்டுகிற பாணியில் அமைந்துவிட்டது என் குதிரைச் சவாரி. அது மட்டுமா?

செங்குத்தாக ஏறும்போது, குதிரைக்காரன், ''ஆகே! ஆகே!'' என்பான். பாதாளத்தில் இறங்கும்போது, ''பீச்சே! பீச்சே!'' என்பான். அதாவது, குதிரை மேட்டில் ஏறும்போது சவாரிக்காரர் முன்பக்கமாகக் குனிய வேண்டும். அது சரிவில் இறங்கும்போது பின்பக்கமாகச் சாயவேண்டும்.

எல்லாம் முன் பார, பின் பார சமாசாரம்தான். அவன் சொல்கிறபடி நாம் செய்யாவிட்டால் குதிரைக்குக் கால் சறுக்கும். நமக்குத்தான் ஆபத்து. சுருங்கச் சொன்னால், நமக்கு எப்போது முன்னால் சாய்ந்தால் சௌகரியமாக இருக்குமோ, அப்போது பின்னால் சாயச் சொல்வான். எப்போது பின்னால் சாய்ந்தால் பரவாயில்லை என்று நினைக்கிறோமோ அப்போது குனியச் சொல்வான். குனிவு என்றால் சாமானியக் குனிவா? குதிரையின் கழுத்தைக் கட்டிப் பிடிக்காத குறையாக கிண்டி ஜாக்கி மாதிரி குனிந்திருப்போம். அவனுக்கு அது பற்றாது. ''ஆகே! ஆகே!'' என்று கத்துவான். ஆகேக்கும் பீச்சேக்குமாகச் சாய்ந்து ஆடி ஆடி, அந்த ஆறரை மணி குதிரைப் பிரயாணத்துக்குள் எங்கள் இடுப்பு பட்ட பாடு! நோவால்ஜின் கண்டுபிடித்த மகான் நீடூழி வாழ்க!

குதிரை கொஞ்ச தூரம் போன பிறகுதான் குருநாதர் வேறு சில முக்கியமான நுட்பங்களைக் கற்றுத் தர மறந்துவிட்டது எனக்குப் புலனாயிற்று. கீழே கிடுகிடு பள்ளம். அந்தச் சரிவில் குறுகிய பாதை. அதில் செல்லும் குதிரைக்குத்தான்—கடவுளே! எத்தனை வகைக் கவர்ச்சிகள்! வழியில் மலை முகட்டிலிருந்து ஒரு சின்னப் பூவோ அல்லது பசுமையான இலையோ தலையை நீட்டிக் கொண்டிருக்கும். குதிரையார் உடனே தமது திசையை மாற்றிக்கொண்டு அந்தப் புல்லைத் தின்னக் கழுத்தை நீட்டிக் குனிவார். மேலே ஒரு ஜீவன் உயிரைப் பிடித்துக் கொண்டிருக்கிறதே என்று அவருக்குத் துளியும் அக்கறை இல்லை.

ஹார்ஸ் பவர் என்றால் என்ன என்பதையும் புரிந்து கொள்ளும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது. மணிக்கு இரண்டு மைல்தான் போகும். அதுவும் முன்னால் ஒருத்தன் இழுப்பான். பின்



ஆகே.... ஆகே....

னால் ஒருத்தன் வாலைப் பிடித்து முறுக்குவான். கையிலுள்ள கம்பால் நாலு தட்டுத் தட்டுவான். நமக்குப் புரியாத 'பரி' பாஷையில் அதனுடன் பேச்சு வார்த்தை நடத்துவான். அப்புறம்தான் அது நகரும். அந்தப் பிராணியும் என்ன செய்யும்? மலை அப்படிச் செங்குத்து!

சுவாமி தரிசனம் செய்துவிட்டு இறங்கும் யாத்திரிகர்கள், "இன்னும் எவ்வளவு தூரம் கடக்க வேண்டியிருக்குமோ?" என்ற கவலையுடன் ஏறி வரும் பிரயாணிகளுக்கு உற்சாகமூட்ட, "ஜெய் கேதார் மகராஜ்கி—ஜெய்!" என்று கூவுகிறார்கள். திருப்பதி மலை ஏறும்போது "கோவிந்தா! கோவிந்தா!" என்கிறார்களே, அந்த மாதிரி. அந்த கோஷத்தைக் கேட்டதும், 'இவர்கள் போய் வந்திருக்கிறபோது நம்மால் முடியாதா?' என்ற தைரியம் உண்டாகவே, ஏறுகிறவர்களும், "கேதார்நாத் மகராஜ் கி ஜெய்!" என்கிறார்கள். மூச்சு இறைத்தால், "ஜெய் ஹோ!" என்று சுருக்கமாக முடித்துவிடுகிறார்கள்.

முதுகில் பையும் கையில் கோலுமாகப் பல மாணவர்கள் கேதார் மலையேறுவதைக் கண்டோம். ஆண்களில் எல்லா வயதினரும் வருகிறார்கள். பெண்கள் அனேகமாக நாற்பதுக்கு மேற்பட்டவர்கள்தான். 'இவர்களால் தண்டியில்கூடப் பிரயாணம் செய்ய முடியாதே,' என்று நாம் நினைக்கக்கூடிய பல பிரம்மாண்டமான வடநாட்டுப் பெண்மணிகள் அந்தப் பதினொரு மைலையும் கால்நடையாகவே கடக்கத் துணிவது ஒரு பேராச்சரியம்!

அவர்களது பக்தியைப் பார்க்கும்போது, 'நாம் மட்டும் குதிரை சவாரி செய்கிறோமே,' என்ற வெட்கம் சில சமயம் தலைகாட்டாமல் இருக்காது. உடனே, 'குதிரையில் உட்கார்ந்து பார்த்தால் அல்லவா தெரியும்? நடப்பதைக் காட்டிலும் இது பல மடங்கு கஷ்டமாக்கும்,' என்று எங்களை நாங்களே சமாதானம் செய்துகொள்வோம்.

எட்டு மைல் சென்றோம். மாலை 4 மணியாயிற்று.

முதலில் சரியான வெய்யில். மூன்றரை மணிக்கு மேல், மப்புத் தட்டத் தொடங்கிற்று. குதிரைக்காரர்கள் அவர்கள் மொழியில் உரக்க ஏதோ பாட ஆரம்பித்தார்கள். நானும் அவர்களைப்போலவே தொண்டை கிழியக் கத்திப் பாடியபோது, அவர்களுக்கு ஏற்பட்ட குதூகலம்—அதிலும் இரண்டு சிறுவர்கள் சிரித்த சிரிப்பு—மறக்க முடியாது.

கேதார்நாத்துக்கு ஒன்றரை மைல் தூரம் இருக்கும்போது அடிக்கத் தொடங்கியது பாருங்கள் ஒரு கடுங் குளிர்! அடேயம்மா! மழை வேறு.

ஏறக்குறைய எல்லாரும் விறைத்தே போய்விட்டோம்.

குதிரையில் உட்கார்ந்திருக்கிறோமென்று பெயரே தவிர, லகானைப் பிடிக்க முடியாமல் கை விறைத்துவிட்டது. ஆசனத்தில் உட்கார முடியவில்லை. கம்பளிப் போர்வைகளையும் கோட்டுகளையும் அள்ளிப் போர்த்துக் கொண்டோம். (தொடரும்)

எத்தனை பட்டைகள்? விடை!

1—6; 2—5; 3—8; 4—7; 5—5; 6—11; 7—6; 8—6; 9—8; 10—5.

ஆதாரம்: டெஸ்ட் யுவர்செல்ஃப்

## நுணுக்கம் தெரியாத பெண்

அண்மையில் காமதேனு வாசலில் ஏதோ ஒரு கூந்தல் பவுடரை அறிமுகம் செய்து உள்ளே நுழைகிறவர்களிடம் விளக்கிச் சொல்லி விற்பனை செய்து கொண்டிருந்தாள் ஓர் இளம் பெண்.

நான் என் மனைவியுடன் சென்றிருந்தேன். அந்தப் பெண் அக்கறையோடு என்னிடமும் விளக்கம் கொடுத்துக் கொண்டிருந்தாள். நானும் அப்பாவித்தனமாய்க் கேட்டுக் கொண்டிருந்தேன். பின்னாலிருந்த மனைவி என் விலாப்புறம் இடித்து, 'போங்கள் அந்தண்டை' என்று விழிகளால் மிரட்டினாள்.

எனக்கு அந்த விற்பனைப் பெண்ணைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. தனியாக வரும் ஆண்களிடம் அவள் பேசினால் பலன் இருக்கும். தம்பதியாய்வரும்போது பெண்ணிடம் பேசினால்தான் பலன் இருக்கும் என்று யாராவது சொல்லமாட்டார்களா அந்த ஸேல்ஸ் கர்லிடம்?



—சுந்தரம்

# ஜெய் விசால் பத்ரி!

## ஜெய் கேதார் மஹராஜ்!

ரவி

இருட்டுகிற நேரம். கொல்லுகிற குளிர். அதோ ஒரு டீக் கடை. அது வெறும் டீக்கடை மட்டுமல்ல. ஒதுங்கக் கூரையும், உட்காரத் திண்ணையும், குளிர் காய அடுப்பும் கொண்ட தேவலோகம்.

'தான் ஆடா விட்டால் தன் சதை ஆடும்,' என்பார்கள். எங்கள் விஷயத்தில் நாங்களும் ஆடினோம், எங்கள் சதையும் ஆடிற்று. பல், எலும்பு, குடல் எல்லாமே ஆடின. தேனீர்க் கோப்பையை வாங்கிக் கொள்ளலாம் என்றால் விரல்களை மடக்க முடிந்தால்தானே? குதிரையிலிருந்து இறங்கிய ஒரு நண்பர், தடாலென்று சாஷ்டாங்கமாகத் தரையில் விழுந்து வணங்குவதைக் கண்டோம். அவரது மூக்கு நுனியில் சிலிர்ப்பு உண்டாகி விட்டதைப் பார்த்த பிறகுதான், அவரது செயலுக்குக் குளிரால் ஏற்பட்ட விறைப்புக் காரணமே தவிர பக்தியல்ல என்று புரிந்தது. (பூட்ஸை ஸோன்பிரயாகையில் வைத்து விட்டு வந்திருந்த வீம்புக்காரர் அவர்.)

இங்கேயே குளிர் இப்படி இருந்தால், போகப் போக எப்படி இருக்குமோ? கண்டலுக்கும் டீக்கும் பிறகு குதிரைகளில் ஏறிக்கொண்டு, பற்கள் கடகடக்க, ஒரு நடமாடும் டைப்ரைட்டிங் இன்ஸ்டிட்யூட்டாகக் கேதார்நாத்தை நோக்கி முன்னேறினோம்.

தூரத்தில் பளிச்சென்று ஒரு விளக்குத் தெரிந்தது. ஒற்றை விளக்கு



கோவில் கோபுரத்தின் விளக்கு. பிரகாச மான விளக்கு.

''அது என்ன'' என்று அவரோடு கேட்டோம்.

''அதுதான் கேதார்நாத்,'' என்றார்கள்.

ஜெய் கேதார்நாத்! கேதார் மகராஜ் கி ஜெய்! உற்சாகம் பீரிட, நேர எதிரே கண்ணுக்குப் புலப்பட்டுவிட்ட மகிழ்ச்சி படையெடுப்பில் களைப்பும் சோர்வும் அச்சமும் ஓட்டம் பிடிக்க, தொண்டை கிழியக் கோஷமிட்டோம்.

ஒரு வழியாக கேதாரநாத்தை இரவு ஏழு மணிக்கு அடைந்தோம். மிகச் சிறிய ஊர் அது. இரவு சீக்கிரமே கோவிலை மூடிவிடுவார்களாதலால் உடனே அவசரம் அவசரமாகக் கோவிலுக்குச் சென்றோம்.

மூர்த்தி, லிங்க ரூபமாகக் காட்சி தரவில்லை. சிறியகுன்று போன்ற வடிவில் காட்சி தருகிறார்.

அவருக்கு அர்ச்சனைக்கென்று மல்லிகையும் இருவாட்சியும் ரோஜாவும் கிடையாது. மலைப் பாறைகளிலும் ஓரங்களிலும் வளர்ந்துள்ள சிறு சிறு காட்டுப் பூக்களும், இலைகளும்தான் அவரை அர்ச்சிக்க உதவும் மலர்கள்.

ராத்திரி தரிசனம் ஆனதும் சிற்றுண்டி அருந்திவிட்டு ஒரு சிறு வீட்டின் மாடியில் இடம் பிடித்துப் படுத்துக் கொண்டோம். ராத்திரி சிறு நீர் கழிப்பதற்காக எழுந்தேன். நண்பர்களை நான் பார்க்கவில்லை. ஆறு சிறு கம்பளிக் குன்றுகள் படுத்திருந்தன.

விடியற் காலையில் கேதார்நாத் கோவிலைப் பார்த்தபோது அதன் அழகு மெய் சிலிர்க்க வைத்தது. பின்னணியிலுள்ள இமாலயமும் அதன் பனியும், வலப் பக்கம் சலசலத்துச் செல்லும் மந்தாகினியும் கண்ணுக்கு விருந்து. மனத்துக்கு மருந்து.

காலை 7 மணிக்குக் கோவிலில் அபிஷேகம்.

எங்கள் கையாலேயே நீராட்டி, மலர் தூவி, வெண்ணெய் பூசி, எங்கள் நெற்றியால் ஸ்பரிசித்து வணங்கியபோது, மனத்துக்குப் புளகாங்கிதமாக இருந்தது. வாழ்க்கையில் அது ஒரு மகத்தான பாக்கியம்!

கோவிலை விட்டு வருகையில் பெரியவர் பக்கம் திரும்பினேன். ஸ்வெட்டரும், கோட்டும், உல்லன் முக்காடுமாக, இந்தப் பூனையும் பாலைக் குடிக்குமா என்று அவர் நின்றிருந்தார்.

சந்தனம் பூசிய நெற்றிக்குக் கீழேயிருந்து அவரது கண்கள் ஒரு தனி ஒளியோடு சுடர் விடுவதைக் கண்டேன்.

குப்த காசியில் தள்ளாடி விழுந்த நோயாளியா இவர்! தொய்ந்து உட்கார்ந்தபடி, எங்களையெல்லாம் பயப்படுத்திய பேதி மாத்திரையா இவர்! நம்ப முடியவில்லை.

''என்ன சார், எப்படி இருக்கிறது?'' என்று விசாரித்தேன்.

சிரித்தபடி, ''ஒன்றுமே இல்லை. ரொம்ப நன்றாக இருக்கிறது.'' என்றார் அவர்.

அவரை யார் சொஸ்தம் பண்ணினது? மருந்தா? லங்கணமா? இரண்டு மணிக்கொரு தரம் கொடுக்கப்பட்ட ஹார்லிக்ஸா? இரவு தூக்கமா? அல்லது இவையெல்லாம் தவிர வேறொன்றா? அந்தக் கேதாரிநாதனைத்தான் கேட்க வேண்டும்.

(தொடரும்)



சார் நான் ஒரு ஏழை பிரம்மசாரி. எனக்குக் கன்னிகா தானம் பண்ணுங்க சார்!''



'பீக்காவை எங்கே காணோம்?'

'பீக்காவுக்குப் பக்கத்தில் நான் படுக்க மாட்டேன். பயங்கரமான குறட்டை!'

'பல்லை வலிக்கிறதா? பீக்காவிடம் மருந்து வாங்கிப் போட்டுக்கொள்.'

எங்கள் கோஷ்டியினரால் 'பீக்கா' என்று கேலியாக அழைக்கப்பட்டவன் வேறு யாருமில்லை. அடியேன்தான்.

என் பேச்சிலும் நடத்தையிலும் எவ்வளவு தூரம் இனிமை இருக்கிறது என்பது எனக்குத் தெரியாது. ஆனால் என் ரத்தத்தில் அது ஏராளமாக உண்டு. ஆகவேதான், "சர்க்கரையா? மூச்சு விடக் கூடாது," என்று டாக்டர் எச்சரித்திருந்தார்.

டீக் கடையில் ஏழு தேனீருக்கு ஆர்டர் பண்ணுவோம். என் கிளாஸில் சர்க்கரை போடக் கூடாது என்று முன்னமே தோன்ற வேண்டுமே? தோன்றாது. கடைக்காரன் கலக்க ஆரம்பித்திருப்பான். திடீரென்று நான் விழித்துக் கொண்டு, "ஏக் பீக்கா! ஏக் பீக்கா!" என்று உயிரே போய் விட்ட மாதிரி அறிவிப்பேன். (சர்க்கரை போடாத தேனீர்: பீக்கா டீ) திடீர் கூச்சலைக் கேட்டுத் திடுக்கிட்ட கடைக்காரன், கொஞ்சம் விழித்து விட்டுப் பிறகு, "அச்சா, அச்சா. ஏக் பீக்கா," என்று காரியத்தில் ஈடுபடுவான். யாத்திரை மேற்கொண்டதில் புண்ணியத்தோடு புண்ணியமாக ஒரு புதிய பெயரும் எனக்குக் கிடைத்து விட்டது. நண்பர்களுக்கு நான் 'பீக்கா'வாகி விட்டேன்.

காலையில் டீ (ஆறு மீட்டா, ஒரு பீக்கா) அருந்திவிட்டுக் கேதார் நாதனிடம் உத்தரவு வாங்கிக் கொண்டு புறப்பட்டோம்.

ஊருக்குச் சற்றுத் தள்ளி, அரசினர் கட்டியுள்ள 'ஹிம்லோக்'—பனி உலகம்—என்ற புதிய ஓட்டல் இருக்கிறது. அங்கே ஈ காக்கை கிடையாது. ஈ காக்கைதான் அங்கு எங்குமே இல்லையே? மனிதர்களே இல்லை என்பதற்குச் சொல்ல வந்தேன். ஒரே ஒரு காவற்காரன். அவனும் இருட்டியபின் ஊருக்குள் வந்துவிடுவானாம். முன் கூட்டியே அறிவித்தால்தான், சமையற்காரன், பணியாட்கள் ஆகியோருக்கு ஏற்பாடு பண்ணுவார்களாம்.

ஸெப்டம்பர் முப்பதாம் தேதியுடன் கேதார்நாத் கோவில் மூடப்படுகிறது. அப்புறம் கடுமையான உறை பனி. யாருமே அங்கு இருக்க முடியாது. பிறகு மறு வருடம், கோடை வந்த பிறகுதான் கோவிலைத் திறப்பார்கள்.

'தண்டிகள்' முன்னே சென்று விட்டன. குதிரைகளில் வந்த மற்ற நண்பர்கள், பாதி தூரம் வந்ததும், "நாங்கள் நடந்தே போகிறோம். உடம்பு தெம்பாக இருக்கிறது," என்று இறங்கி நடந்துசென்றுவிட்டனர்.

நான் மட்டும் குதிரையில் வந்துகொண்டிருந்தேன்.

குதிரைக்காரர்கள் ஏதோ பேசிக்கொண்டார்கள். அதன் சாராம்சமாவது: இவனோடு வந்த மற்றப் பேர் வழிகளெல்லாம் இறங்கி நடக்கும்போது இவனுக்கு மட்டும் என்ன கேடு? இவனும் இறங்கி நடக்க வேண்டியதுதானே?

எப்படியிருக்கிறது கதை? குதிரையில் வருவதும் வராததும் என் இஷ்டம். இவர்கள் யார் கேட்பதற்கு? நடந்தால், கூலியிலா குறைத்துக் கொள்ளப் போகிறார்கள்?

எனக்குத் தெரிந்த இந்தியில், "அம் கோடா, வாக் நை," என்றேன்.

குதிரைக்காரன் திட்டிக் கொண்டே வந்தான். பொறுத்துப் பார்த்தேன். இன்னும் பொறுமையாயிருந்தால் குதிரையும் கூட நம்மைத் திட்ட ஆரம்பிக்கும் என்ற நிலைமை வந்ததும் திருப்பித் தமிழில் திட்டத் தொடங்கிவிட்டேன்.

நண்பர்களைச் சந்தித்ததும், அவர்களிடம், [அவர்களில் சிலருக்கு பட்லர் இந்தி தெரியும்] "குதிரைக்காரன் கண்டபடி திட்டுகிறான். கண்டியுங்கள்," என்று புகார் பண்ணினேன்.

அவர்கள் அவனை விசாரித்துவிட்டு, "அவன் ஒன்றுமே பேசவில்லையாம். சும்மா கதை அளக்காதே!" என்றார்கள், அவனுக்குப் பரிந்து கொண்டு.

ஆத்திரத்தோடு, "பொய் சொல்கிறான். புரியாத பாஷையில், வாய்க்கு வந்தபடி திட்டினான்!" என்றேன்.

"உனக்குத்தான் பாஷை புரியாதே! திட்டினான் என்று எப்படித் தெரியும்?" என்றார்கள்.

—ரவி

பிரமாத லாஜிக் பேசுவதாக நினைப்பு. முக பாவத்திலிருந்து ஒரு மனிதன் நம்மைத் திட்டுகிறுரு இல்லையா என்று தெரிந்து கொள்ள முடியாதா?

இந்தத் துரோகிக் கும்பலோடு நமக்கென்ன பேச்சு என்று வாயை மூடிக் கொண்டு விட்டேன். ஆனுல் உள்ளம் கொதித்தது —கௌரி குண்டத்தைப் போல.

கௌரிகுண்டம் என்னும் இடத்தில் வென்னீர் ஊற்று ஒன்று இருக்கிறது.

ஆனந்தம்! ஆ ன ந் த ம்! அலுப்புத் தீர, இயற்கை அளித்திருக்கும் அந்தச் சிறிய வென்னீர்க் குளத்தில் குளித்தோம்.

கபகபவென்று பசி எடுத்தது.

குளக் கரையிலேயே சாப்பாட்டுக் கடை இருந்ததோ, நண்பர்கள் என் பசியிலிருந்து தப்பினுர்களோ!

சுமார் 2 மணிக்கு ஸோன் பிரயாக் வந்து சேர்ந்தோம்.

(பிரயாக் என்பதற்கு, இரண்டு நதிகள் சேரும் இடம் என்று பொருள்.)

டாக்ஸி டிரைவர்கள் எங்களுக்காக அங்கு காத்திருந்தனர்.

பெரியவர் உடல் நலத்தோடு இருப்பதைக் கண்டதும், "நான் அப்போதே சொன்னேனே?" என்ற பாவனையில் புன்னகை செய்து வரவேற்ருர் சுர்வீர் சிங்.

ஸோன்பிரயாக்கில் குதிரைக்காரர்களுக்கும் தண்டிக்காரர்களுக்கும் சத்தம் கொடுத்து அனுப்பினுேம். ஆனுல் அவர்கள் பேசினதுக்கு மேல் பணம் கேட்டுச் சத்தம் போட்டனர். ஒரு வழியாகத் திருப்திப் படுத்தி விட்டுக் கிளம்பினுேம்.

இமயமலைப் பகுதியிலுள்ள மலைகளைப்பற்றி ஒரு வார்த்தை. அவை பெரும்பாலும் கடினமான பாறைதான். ஆனுல், சில இடங்களில் உறுதியில்லாத மண்ணுல் மூடப்பட்டு இருக்கின்றன. அடிக்கடி மண் சரிந்து, பாதை அடைபட்டுப் போய் விடுகிறது. செப்பனிடப்பட்ட பின்னர்தான்—அதற்குச் சில மணி நேரம் பிடிக்கலாம், இரண்டு நாள் கூட ஆகலாம்—போக்குவரத்து மீண்டும் தொடங்க முடியும்.

நாங்கள் ருத்ரப்பிரயாகை அடைந்ததும், கேதார் பாதை மறுபடி அடைபட்டு விட்டதாகக் கேள்விப்பட்டோம். கேதார்நாத்தில் சற்றுத் தாமதித்திருந்தால், வழியிலுள்ள ஏதேனும் ஒரு கிராமத்தில் மணிக் கணக்கில் உட்கார்ந்திருக்க வேண்டி நேர்ந்திருக்கும். தப்பித்தோம். ஜெய் கேதார்நாத்!

ருத்ரப்பிரயாகையில் இரவு தங்கினுேம். அது மிகவும் முக்கியமான ஊர். நிறையப் போக்குவரத்து உண்டு. தங்குவதற்கு நல்ல விடுதியில் இடம் கிடைக்கவில்லை. கடைசியாக ஒரு வீட்டில் இரண்டு அறைகளைப் பிடித்தோம்.

வீட்டுக்காரரிடம், பாத்ரூம் எங்கே இருக்கிறது என்று கேட்டால் தெருக்குழாயைக் காட்டினுர். எங்கேயிருக்கிறது லெட்ரீன் என்று கேட்டதற்கு எதிர் வீட்டைக் காட்டி, 'என் பெயரைச் சொன்னுல் வீட்டுக்காரர் அனுமதிப்பார்,' என்ருர்.

நாங்கள் அவருடன் திண்ணையில் நின்றவாறு பேசிக் கொண்டிருக்கையில் யாரோ இரண்டொருவர் அவரிடம் வந்து ஏதோ கேட்டுச் சென்றனர். கொஞ்ச நேரத்தில் அவர்கள் மூட்டை முடிச்சுகளுடன் வந்து நாங்களிருந்த திண்ணையில் ஏறிக் கொண்டனர். அப்புறம்தான் தெரிந்தது. எங்களுடன் பேசிக் கொண்டிருந்த நேரத்தில் அந்தத் திண்ணையையும் அவர் வாடகைக்கு விட்டுவிட்டார் என்று!

ருத்ரப்பிரயாகையில் இரவை ஒரு வழியாகக் கழித்தோம். காலைச் சிற்றுண்டி ஆனவுடன் பத்ரிநாத் பயணத்தைத் தொடர்ந்தோம். வழியில் காஞ்சி புதுப் பெரியவர்களைத் தரிசிக்கும் பேறு கிடைத்தது.

[தொடரும்]

பல்:

பாப்கார்ன் பாக் கேட் ஒபனர்.



ஒரு தெலுங்குப் படத் திற்காகப் பிரமீளா, குழந்தைக்குத் தாலாட்டுப் பாடிக் கொண்டிருந்தார்.

பாட்டின் ஒவ்வொரு வரிக் கும் தமிழ் அர்த்தத்தைக் கேட்டுக் கொண்டு அதற்கேற்ப வாயசைத்தார் பிரமீளா. சில சமயம் தமிழில் சரியா கப் பொருள் சொல்ல முடியாமல் திண றிய உதவி டைரக்டர், ''பாட்டைக் கேட்டு அப்படியே வாயசையுங்களேன். அர்த்தம் வேறு எதற்கு?'' என்றார்.

''அர்த்தம் தெரியாமல் எப் படி முகத்தில் எக்ஸ்பிரஷன் கொண்டு வருவது?'' என்று திரும்பிக் கேட்டார் பிரமீளா.

இடைவேளையின் போது, ஒருவர், ''ஜெயசுதாவிடமிருந்து உங்க ளுக்கு ஃபோன் வந்திருக்கு,'' என்றார்.

''அடடா! மறந்தே போய் விட்டேன். காலையிலிருந்து ஏழு முறை போன் செய்து விட்டாள். ஒவ்வொரு முறை நான் பேசப் போகும் பொழுதும் 'ஷாட் ரெடி' என்று சொன்னதால் பேச முடியவில்லை. இப்போது போகி றேன்,'' என்றார் பிரமிளா.

உடனே டைரக்டர், ''அம்மா அம்மா! ஷாட் ரெடி. முடித்துவிட்டு ஃபோனில் பேசுங்கள்,'' என்றார்.

அலுப்புடன் ''ச்சூ!'' கொட் டியவாறு வேண்டா வெறுப்புடன் ஃபோனை வைத்துவிட்டு ஃப்ளோருக் குத் திரும்பினார் பிரமீளா.

—பாரி வள்ளல்

நீண்ட நாட்களுக்குப் பிறகு பழைய தயாரிப்பாளரும், டைரக்டருமான ஏ. கே. வேலன் தயாரிக்கும் 'மங்கல மங்கை' படத்திற்கான முதல் நாள் படப் பிடிப்பு அன்று.

வந்தவர்களை முகம் மலர வரவேற்றுக் கொண்டிருந்த வேல னிடம் ஒருவர், ''ஸ்டுடியோக் களை நேஷனலைஸ் செய்யப் போகிறார் களாமே?'' என்று கேட்டு வைத்தார்.

''செய்யட்டுமே! ரொம்ப நல்லதாப் போச்சு,'' என்றார் வேலன்.

''அருணாசலம் ஸ்டுடியோ உங்க பொறுப்பிலே இருக்கு. நீங்களே இப்படிச் சொல்கிறீங்களே!'' என்று தூண்டினார் கேட்டவர்.

''பின்னே என்னங்க? ஒரு ஸ்டுடியோ நடத்தறதிலே இருக்கற கஷ்டங்களை நம்ம கவர்ன்மெண்ட் எப்படித் தெரிஞ்சுக்கறது? அவங்களே எடுத்து நடத்திப் பார்த்தாத்தானே தெரியும்? எங்களுக்கு வேண்டிய பல்பு கள் கூட மார்க்கெட்லே வாங்க முடி யறதில்லே. 1972–73'ஆம் வருஷத் துக்கு வர வேண்டிய பல்பு லைசன்ஸ் இன்னும் வரல்லே. 2000 வாட் பல்பு

-ரவி-

பிப்பல்கோட்டில் சுகாதார அதிகாரிகள், நாங்கள் தடுப்பு ஊசி முதலியவை போட்டுக் கொண்டதற்கான சான்றிதழ்களைச் சோதித்தனர்.

என் நண்பர் ஒருவருக்குச் சென்னையில் அம்மை குத்திக்கொண்ட ரணம் இன்னும் ஆறாமலிருந்தது.

காரிலிருந்தபடி பெருமையுடன் தன் கையை நீட்டிக் காட்டினார். அருகிலிருந்த நண்பர் அவர் கையைச் சட்டென்று உள்ளுக்கு இழுத்தார். 'நீர் கையைக் காட்டிவிட்டால் தீர்ந்ததா? அதே மாதிரி எல்லாருடைய கையையும் சுகாதார அதிகாரி காட்டச் சொன்னால் என்ன ஆவது?' என்று அவர் கண்கள் ஜாடையாகக் கண்டித்தன.

பிப்பல்கோட் சத்திரத்தில் குளித்துச் சாலையிலிருந்த கடையொன்றில் சாப்பிட அவகாசம் கிடைத்தது. அங்கிருந்து புறப்பட்டதும் எங்கள் கண்கள் வழியில் தென்பட்ட கூடாரங்களையும் முகாம்களையும் ஆவலுடன் நோக்கியபடி இருந்தன.

காஞ்சி புதுப் பெரியவர்களின் அனைத்திந்தியப் பாத யாத்திரை பற்றிப் பத்திரிகையில் வந்த செய்திகளை வைத்து, அனேகமாக நாங்கள் பத்ரி செல்லும் வழியில் அவர்களைச் சந்திக்கக் கூடுமென்று முன்னமே தெரிந்து வைத்திருந்தோம்.

ஒரு கிராமம் தென்பட்டால் போதும். வண்டியை நிறுத்தி விசாரிப்போம்.

''சங்கராசாரிய சுவாமி கிதர் ஹை?''

முந்தின நாள் அல்லது அதற்கு முந்தின நாள் அவர்கள் அங்கிருந்ததாகத் தகவல் கிடைக்கும்.

கண்ணில் விளக்கெண்ணெய் விட்டுக்கொண்டு, தேடியபடி பிரயாணத்தைத் தொடர்வோம்.

''அதோ, அதுவாகத்தான் இருக்கும். கூடாரங்களைப் பாருங்கள்.''

''இல்லை. ராணுவ முகாம் மாதிரி இருக்கிறது.''

''அனேகமாக இப்போது நடந்து போய்க் கொண்டிருப்பார்கள் என்று நினைக்கிறேன்.''

''காலையில்தான் நடையாம். ரிஷிகேசத்தில் சொன்னார்களே?''

''பத்ரி போய்ச் சேர்ந்திருப்பார்களோ?''

''ஊஹூம். நாளை மறு நாள்தான் பத்ரி. இப்போது முகாமில்தான் இருப்பார்கள்.''

குழந்தைகளுடன் சினிமாவுக்குச் செல்லும்போது ஏற்படக்கூடிய அனுபவம் ஒன்று ஞாபகத்துக்கு வருகிறது. ஒரு பெரிய நடிகர் அல்லது நடிகை பின்னால் உட்கார்ந்து கொண்டிருப்பதாக இடைவேளையின்போது யாராவது சொல்லி வைப்பார்கள். அவ்வளவுதான். குழந்தைகளுக்குப் பரபரப்புத் தாங்காது. எழுந்து நின்று அந்த நட்சத்திரத்தையே திரும்பிப் பார்த்துக் கொண்டு, தங்களுக்குள் கிசுகிசுவென்று பேசிக் கொள்வார்கள். முகத்தில் குதூகலம் பொங்கி வழியும். 'எத்தனை பேருக்கு இப்படி ஒரு அதிர்ஷ்டம் கிடைக்க முடியும்?' என்ற கர்வம் ஜொலிக்கும். அதன் பின்னர் அந்தப் படத்தில் ஒரு புது உற்சாகம். 'நட்சத்திரம் பார்க்கும் அதே காட்சியை நாமும் பார்த்துக் கொண்டிருக்கிறோம்,' என்ற உணர்வில் ஒரு பெருமிதம். 'இதில் இவர்களுக்கு என்ன இவ்வளவு சந்தோஷம்!' என்று நாம் ஆச்சரியப்படுவோம். ஆனால் நாங்கள் அந்தக் கூடாரங்களை எதிர்பார்த்துக்கொண்டு சென்றபோது, கிட்டத்தட்ட அந்தக் குழந்தைகளின் மனநிலையில்தான் இருந்தோம்.

கடைசியில், பத்ரிக்குச் சுமார் பதினேழு மைல் இந்தண்டை, ஹேலாங் என்ற இடத்தில் எங்கள் ஆவல் நிறைவேறிற்று.

சாலை ஓரமாக ஒரு லாரி நின்றிருப்பதைக் கண்டோம். அதில் ஏற்றுவதற்காகச் சில பொருள்கள் தரையில் வைக்கப்பட்டிருந்தன. மலைச் சரிவில் மூன்று நான்கு கூடாரங்கள். சாலையோரமாக நடப்பட்டிருந்த ஒரு பலகை; அதுதான் ஆசாரிய சுவாமி

களின், முகாம் என்று வழி காட்டிற்று. சட்டை, பனியன் ஆகியவற்றைக் கழற்றிவிட்டு, (அது வெய்யில் நேரம்) துண்டை எடுத்து இடுப்பில் கட்டிக் கொண்டு சுவாமிகளின் சிறிய சதுரக் கூடாரத்தை அடைந்தோம்.

பூஜையெல்லாம் முடிந்து, அவர்கள் ஓய்வெடுத்துக் கொள்ளும் நேரம். கட்டாந்தரை. கயிற்றுக் கட்டில். எங்களைக் கண்டதும் அவர்கள் புன்னகையுடன் எழுந்து உட்கார்ந் தார்கள்.

அந்தச் சூழ்நிலை! பத்துப் பதினோராயிரம் அடி உயரத்தில் பசுமையும் வெண்மையும் கலந்து உறையும் புனித மண்டலத்தில் புதுப் பெரியவர்களைச் சந்திக்கிறோம் என்ற உணர்வினால் எங்கள் உடலெங்கும் ஏற்பட்ட சிலிர்ப்பு! குழந்தைபோல் புன்னகை செய்துகொண்டிருந்த புதுப் பெரியவர்களை மட்டுமா அங்கு கண்டோம்? காஞ்சியருகே அமர்ந்திருக்கும் தவச் செல்வரைக் கண்டோம். கேதாரையும் பத்ரியையும்—ஏன், தாழ்ந்து போயிருந்த ஒரு மாபெரும் சமயத்தையே—எடுத்து நிறுத்திய ஆதிசங்கரரைக் கண்டோம்.

'சங்கரா! சங்கரா!' என்று என்னையறியாமலே என் நா முணு முணுத்தது. தொண்டை அடைத்தது. கண்களில் ஈரம் கசிந்தது. நெடுஞ் சாண்கிடையாக விழுந்தேன்.

புதுப் பெரியவர்கள் அன் புடன் எங்கள் யாத்திரையைப்பற்றி விசாரித்தார்கள். திருநீறு, குங்குமம், கற்கண்டு ஆகியவற்றை அவர்களிடம் பெற்றுக்கொண்டு கூடாரத்தை விட்டு வெளியே வந்த போது, வானத்தில் மிதந்து கொண்டிருக்கிறாற் போன்ற உணர்ச்சி.

உயர உயரப் பறந்தாலும் ஊர்க் குருவியைப் பற்றி ஒரு பழமொழி உண்டு.

உயர்ந்த உணர்ச்சிகள் எல் லாம் சில நிமிடத்துக்குத்தான். ஏதோ ஒரு சில்லறை விவகாரம் முளைத்தது. போதாதா? உரசல். வாக்குவாதம். நான் பழைய ரவி ஆகிவிட்டேன். வண்டி பத்ரியை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது. உள்ளம் சென்னைக் குத் திரும்பிவிட்டது.

அனுமான்சட்டி என்ற ஊரில் அந்தச் சம்பவம் நடந்ததே. அதற்குத் தண்டனையாகத்தானே?

(தொடரும்)









# அமிர்தாஞ்சனம்

AM/7570

**தலைவலி, ஜலதோஷம் மற்றும் வலிகளுக்கு நம்பகமான நிவாரணி**

அமிர்தாஞ்சனம் ஜலதோஷம், உடல்வலி, தசைவலி, தலைவலி, களுக்கு இவற்றிலிருந்து உடனடியாக குணமளிக்கிறது. அமிர்தாஞ்சனம் தடவியதும் வலி மறைகிறது. பாட்டில்கள், சிக்கனமான ஜாடிகள், மற்றும் மலிவு விலை டப்பாக்களிலும் கிடைக்கிறது.

அமிர்தாஞ்சனம் — பத்து மருந்து பொருள்கள் ஒருங்கே சேர்ந்தது.

அமிர்தாஞ்சன லிமிடெட்

---

# பளிச்சிடும் வெண்மை, பார்வைக்குத் தூய்மை - காவேரி பார் சோப்.






மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்,
மேட்டூர் அணை, 636402.

ஆடுது பாவை தக தக திம் திம்
பாடுது காதல் மோகன கீதம்



காடு கரை எங்கெங்கும் தேடித் தேடி ஏலேலோ,
கண்டுகொண்டேன் ஏலேலோ கைகொடுக்கும் திருமகளை.
பாடுகிறேன் கர்வாரே நைலான் வலை யருளைப்
பாடுகிறேன் ஏலேலோ காதலியைப் பாடுவதுபோல்!

திடமாக செய்த வலை, கர்வாரே நைலான் வலை — ஏலேலோ,
திரள் திரளாய் மீன்பிடிக்கும், திரவிய லாபம் பெருக்கும்!

**கர்வாரே நைலான் வலை என்றால் கரைகடந்த மீன்களோ மீன்கள்!**




கர்வாரே நைலான்ஸ் லிமிடெட், சந்திர முகி, நரிமன் பாயிண்டு, பம்பாய்-400 001.

everest/662/GNL/tm

Canvassing Agent:
மெட்ரோ பப்ளிசிட்டி லிமிடெட்

ரவி

இந்தப் பிரதேசம் பூராவும் ராணுவத்தினரின் மேற்பார்வையில் உள்ளது. பத்ரிக்கு அருகே—இரண்டு மைல் தொலைவில்—சீன எல்லை ஆரம்பமாவதால் ராணுவ நடமாட்டம் இங்கு அதிகம்.

இதனால் பத்ரி யாத்திரிகர்களுக்குப் பெருத்த அனுகூலம். நிலச் சரிவு ஏற்பட்டுப் பாதை தடைபடும் போது ராணுவ புல்டோஸர்கள் விரைந்து சென்று சில மணி நேரத்துக்குள் செப்பம் செய்துவிடுகின்றன. கேதார் பாதை அப்படியல்ல. அது பொது மராமத்துத் துறையினரின் மேற்பார்வையில் இருக்கிறது. பி. டபிள்யு. டி. எங்குமே பி.டபிள்யு.டி தானே?

மலைப்பாதையில் எதிரும் புதிருமாக வண்டிகள் வந்து போய்க் கொண்டிருந்தால் விபத்து நேர வாய்ப்பு அதிகம் என்பதற்காக 'கேட்' முறை கடைப்பிடிக்கப்படுகிறது.

ஒரு மணி நேரம் மேலே செல்ல வண்டிகள் அனுமதிக்கப்பட்டால், அடுத்த ஒரு மணி மேலிருந்து கீழ் இறங்கும் வாகனங்களுக்கு ஒதுக்கப்படுகிறது.

அனுமான் சட்டியில் [சட்டி: சத்திரம் உள்ள ஊர்] 'கேட்' மூடப்பட்டு விட்டது — எங்களுக்கு மட்டும்!

தேவர்கள், தேர் செய்யத் தொடங்கினார்களாம். விநாயகரை நினைக்காமல் அந்தக் காரியத்தில் இறங்கியதால் அதன் அச்சு முறிந்து போய் விட்டதாம். அந்த இடத்துக்கு அச்சிறுபாக்கம் என்று பெயர் வந்ததாகப் புராணம் கூறுகிறது.

அச்சிறுபாக்கம், செங்கல்பட்டு மாவட்டத்தில் மட்டுமா இருக்கிறது? எங்களைப் பொறுத்த வரையில், இமயமலைச் சாரலிலுள்ள கார்வால் மாவட்டத்திலும் ஓர் அச்சிறுபாக்கம் உண்டு. அதற்குப் பெயர்தான் அனுமான்சட்டி.

மாலை நான்கு மணி.

ஏதோ காரணமாக ஒரு நிமிடங்களுக்கு அங்கு வண்டிகள் எல்லாம் நிறுத்தப்பட்டன. காரிலிருந்து ஒரு நண்பர் இறங்கி வந்தார். "இங்கு அனுமான் கோவில் இருக்கிறதாம்," என்றார்.

அது மிகச் சிறிய கிராமம். மிகமிகச் சிறிய கோவில். இன்னும் ஏழே மைலில் பத்ரி வந்துவிடப் போகிறது. எல்லோரும் காரினின்று இறங்க ஒரு நிமிடம் செலவழியும்; கோவிலுக்குப் போய்வர ஐந்து நிமிடம்; மறுபடி காரில் ஏற ஒரு நிமிடம்; பொன்னான ஏழு நிமிடம் வீணாகி விடுமே! நாங்கள் தயங்கிக் கொண்டிருந்தபோது, முன்னாலிருந்த வண்டிகள் நகரத் தொடங்கி விட்டன.

"அப்புறம் பார்த்துக் கொள்ளலாம், வாருங்கள்," என்றோம். நண்பர் திரும்ப வந்து பின் டாக்ஸியில் ஏறிக் கொண்டார்.

கோவிலைக் கடக்கும்போது டிரைவர் எங்கள் வண்டியைக் கோவில் வாசலில் ஒரு நிமிடம் நிறுத்தினார். சௌகரியமாகக் காருக்குள்ளிருந்தவாறே ஒரு கும்பிடு போட்டேன். காருக்குள்ளிருந்தவாறே கும்பிடுவது மரியாதை அல்லவே என்று தயங்கியவாறு பக்கத்திலிருந்த நண்பர் பாதி இறங்கியும் இறங்காமலும் வணக்கம் செலுத்தினார். இன்னும் சிலருக்கு அங்கு ஒரு கோவில் இருக்கும் பிரக்ஞையே இல்லை.

அனுமான் சட்டியைத் தாண்டி எங்கள் கார் ஒரு பர்லாங் தூரம் போயிருக்கும். வண்டி நின்று விட்டது.

"என்னப்பா டிரைவர்? என்ன டிரபிள்?"

"அதுதான் நானும் பார்க்கிறேன்."

டிரைவர் இறங்கிக் கீழே சென்று பார்த்தார். காருக்கு அடியில் குனிந்து பார்த்துவிட்டுச் சொன்னார். "ஆக்ஸில் உடைந்து விட்டது."

எல்லோருடைய முகமும் வெளிறிப் போய் விட்டது..

ஒரு வண்டியில் நாங்கள் ஏறிக்கொண்டு பத்ரிக்குப் போய்விடலாம். மற்றொரு காரைப் பழுது பார்ப்பது எப்படி? ரிஷிகேசம், கிட்டத்தட்ட 175 மைலுக்கு அப்பால் இருந்தது. அங்கிருந்து புது அச்சு வாங்கி வருவதென்றால் மூன்று நாள்கூட ஆகலாம். அப்புறம், பழுது பார்த்துப் புறப்பட வேண்டும் அதுவரை பத்ரியிலேயே தாமதிக்க வேண்டியிருக்குமோ?

எத்தனையோ கேள்விகள். அவற்றை வெளிப்படையாகக் கேட்டு, சோர்வை அதிகப்படுத்திக் கொள்ள விரும்பாமல் நாங்கள் காரைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தோம். பின்னால் வந்த கார்கள் எங்களை முந்திக் கொண்டு விர்ரென்று சென்று விட்டார்கள். சிறிது நேரத்தில் அனுமான் சட்டி வெறிச்சென்றாகி விட்டது.

நாற்புறமும், வானுயர்ந்த மலைகள். நடுவே, நாடா போல் வளைந்து செல்லும் சாலை. கீழே அலக்நந்தா கங்கை. ஆனால் இயற்கையை ரசிக்கக் கூடிய மனநிலையிலா நாங்கள் இருந்தோம்?

டிரைவர் சுர்வீர்சிங் டிக்கியைத் திறந்து நீளமாக எதையோ எடுத்து வந்தார். புதிய ஆக்ஸில்!

"ஸ்பேர் ஆக்ஸில் வைத்திருக்கிறேன். பூட்டுவதற்குத்தான் கொஞ்சம் நேரம் ஆகும்," என்று கூறிவிட்டு ரிப்பேர் செய்வதில் முனைந்தார்.

சுர்வீரின் கையெல்லாம் கரியாக இருந்தது. இல்லாவிட்டால் அவனை அப்படியே கட்டிக் கொண்டிருந்திருப்போம். பிரயாணத்தின் போது சாதாரணமாக ஸ்பேர் டயர், ஃபேன் பெல்ட் இவை போன்ற பொருள்கள் தான் டிரைவர்கள் எடுத்து வருவார்கள். முன் யோசனையுடன் ஸ்பேர் ஆக்ஸில் எடுத்துவந்த டிரைவரை எப்படிப் பாராட்டுவது என்றே எங்களுக்குத் தெரியவில்லை. மலைப்பிரதேசத்தில் இப்படிப்பட்ட அனுபவங்கள் முன்பே ஏற்பட்டிருக்கும் போலும்.

வண்டியை டிரைவர்கள் ரிப்பேர் செய்து கொண்டிருக்க, நாங்கள் எந்த ஆஞ்சனேயரை அரையும் குறையுமாய் அலட்சியமாகக் கும்பிட்டு வந்தோமோ அவருடைய சிறிய கோவில் வாசலிலே போய் உட்கார்ந்து பஜனை செய்ய ஆரம்பித்தோம் — எவ்வளவு நேரமானாலும் சரி, வண்டி பழுது பார்க்கப்படும் வரை எழுந்திருப்பதில்லை என்ற உறுதியுடன்.

மாலை ஆறு மணிக்கு வண்டி ரெடியாகி விட்டது.

ஆஞ்சனேயருக்கு வணக்கம் செலுத்திவிட்டு — இம்முறை வெகு ப... யத்துடன் — பயணத்தைத் தொடர்... தோம்.

ஏழு மணிக்கு பத்ரியை அடைந்தோம். கேதாரை விட பத்ரியி... கும்பல் அதிகமாயிருந்தது. சிறி... டவுன் மாதிரி இருந்தது. யாத்ரிக... கள் தங்குவதற்கு வசதிகள் நிறை... இருக்கின்றன.

'கீதா மந்திர்' என்ற விடு... யில் அறை எடுத்துக் கொண்டோம். மூட்டை முடிச்சுகளை அங்கே போட்... விட்டு பத்ரிநாராயணனின் திரு... கோவிலுக்குச் சென்றோம்.

ஏழு பேருக்கு இருபத்தொ... கம்பளிகளாவது தேவைப்படும் என்... கீதா மந்திர் நிர்வாகியிடம் முன் கூட்... டியே தெரிவித்துவிட்டுப் போயிருக்... வேண்டும். அப்படிச் செய்யாததன் பலனை அன்று இரவு அனுபவித்தோம்.

(தொடரும்)



...அனுமான்சட்டி பூசாரி...

# பித்தன் என்று பெயர் ஏன்?

சிவபெருமானுக்குப் பித்தன் என்று ஒரு பேருண்டு.

மூளை கலங்கி, கண்ணாடித் துண்டுகளையும், பீங்கான் துண்டுகளையும் மூட்டையாகக் கட்டிக் கொண்டு குறிக்கோள் இன்றி அலைபவன்தான் பித்தன்.

"ஈசானச் சர்வ வித்யானாம்" என்று சுருதி முழங்குகின்றது. சகல வித்தைகளும் பிரமேச்சுரனுடைய ஈசான முகத்தினின்றும் தோன்றின. அப்பரமபதி 'வித்யாபதி.'

இத்தகைய ஞானமூர்த்தி பித்தனா? இந்த வினாவுக்கு விடை கூறுகின்றார் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை.

ஒரு நாள் மாலை. பிள்ளையவர்கள் தமது மாணவர்களுடன் திருவானைக்கா சென்று அகிலாண்ட நாயகியைச் சேவிக்கப் புறப்பட்டார்.

மாணவர்கள் பிள்ளையவரை வணங்கி, "ஐயா! சிவப்பிரகாச சுவாமிகள் அண்ணாமலையை வலம் வரும்போது சோணசைல மாலையைப் பாடினார். அதுபோல் இந்த மாலை நேரத்தில் அகிலாண்ட நாயகி மீது ஒரு மாலை பாடியருள வேண்டும்," என்றார்கள். அதுபோல் அறிவின் சிகரமாக விளங்கிய பிள்ளையவர்கள் திருவானைக்கா போய் தேவியைத் தரிசித்துத் திரும்புவதற்குள் நூறு பாடல்கள் — அகிலாண்ட நாயகி மாலையைப் பாடி அருளினார்.

அதில் பித்தன் என்ற பேர் சிவபெருமானுக்கு எவ்வாறு உண்டாயிற்று என்று ஒரு விளக்கம் தருகின்றார்.

ஒரு சிறந்த நாதஸ்வர வித்வான் ஐந்து மணி நேரம் வாசித்தார். கானடா, பேகடா, தர்பார், சகானா முதலிய இராகங்களைக் கர்ணாமிர்தமாக, இன்னிசை மாரியாகப் பொழிந்தார்.

அவரை அழைத்திருந்த முதலாளிக்கு ராகம் என்றால் விராகம்; தாளம் என்றால் வேதாளம். ஒன்றும் தெரியாது. நாதஸ்வரம் வாசித்தவருக்கு சம்பாவனையாக ஐம்பது ரூபாய் தந்தார். ஒத்து ஊதியவனுக்கு ஆயிரம் தந்தார். "இவன் வைத்த குழாயை எடுக்காமல் வாசித்தான். அதனால் இவனுக்கு அதிக சம்பாவனை," என்றார்.

இவ்வாறு சம்பாவனை செய்தவனைக் கிறுக்கன் என்பார்கள்.

தண்ணீரில் விழுந்தவனைத் தண்ணீர் உடனே கொல்லுவதில்லை. மூன்று முறை மேலே கொண்டு வந்து, ஒருவரும் அவனை எடுக்கவில்லையானால் பிறகுதான் கொல்லும். அதனால் "தண்ணீரும் மூன்று பிழை பொறுக்கும்" என்று ஒரு பழமொழி உண்டாயிற்று.

அகிலாண்ட நாயகியாகிய உமாதேவி, எண்ணில்லாத பிழைகளைப் பொறுக்கின்ற கருணை நாயகி; அளவற்ற பிழைகளைப் பொறுக்கின்ற அம்பிகையைச் சிவபெருமான் சென்னியில் வைத்திருக்க வேண்டும். மூன்றே பிழை பொறுக்கின்ற கங்கையை மடியிலே வைத்திருக்க வேண்டும். இவ்வாறு செய்தாரில்லை. அளவற்ற பிழைகளைப் பொறுக்கின்ற கருணாம்பிகையைப் பாதி உடம்பில் வைத்தார். மூன்றே பிழைகளைப் பொறுக்கின்ற கங்கையைச் சடை முடியில் வைத்தார். இதனால் தான் அப்பரமபதி பித்தன் என்று பேர் பெற்றார் என்று மிகுந்த நயமாக ஒரு பாடலைப் பாடினார். அப்பாடல் இது :—

"அளவறு பிழைகள் பொறுத்தருள் நின்னை
அணியுருப் பாதியில் வைத்தான்
தளர் பிழை மூன்றே பொறுப்பவள் தன்னைச்
சடை முடி வைத்தனன்: அதனால்
பிளவியல் மதியஞ் சூடிய பெருமான்
பித்தனென்றொரு பெயர் பெற்றான்
களமர் பொய் கழனி சூழ் திரு வானைக்
கா அகிலாண்ட நாயகியே!"

வெள்ளெனய் திரண்டு வருகிற சமயத்தில் தாழி உடைந்தாற் போல என்கிற பழமொழிக்கு ஏற்ப, மேயர் தேர்தல் நடைபெற இருக்கும் சில நாட்களுக்கு முன்பு மாநகராட்சி கலைக்கப்பட்டால் அந்தக் கவுன்சிலருக்கு எப்படி இருக்கும்?

திரு. ஜேசுதாசன் என்கிற தி. மு க. கவுன்சிலருக்குத்தான் மேயராகும் வாய்ப்பு அதிகம் இருந்ததாம். மைனர் மோசஸ் காலத்திலிருந்தே இவர் தனக்கு எப்படியும் ஒரு நாள் மேயர் பதவி கிடைக்கக் கூடும் என்று எதிர்பார்த்திருந்தாராம்.

சுமார் 20 ஆண்டுகளுக்கு முன்பு கோடம்பாக்கம் சூளை மேட்டில் குடியிருந்த திரு. ஜேசுதாசன் இப்போது ஆயிரம் விளக்கு பகுதியில் வசிக்கிறார்.

சொந்த உழைப்பினாலேயே இவர் முன்னுக்கு வந்து இப்போது மிகவும் வசதியாக இருப்பதாகச் சொல்லுகிறார்கள். மேயர் பதவி கிடைக்காததால் இடிந்து போய்விட்டாரா?

உள்ளுக்குள் எப்படியோ? ஆனால் வெளிப்படையாக, திரு. ஜேசுதாசன், ''எங்கே போய்விடப் போகிறது மேயர் பதவி? மீண்டும் தேர்தல் வராமலா போய்விடும்? தன்னாலே பதவி கிடைத்து விட்டுப் போகிறது!'' என்று நம்பிக்கையோடு நண்பர்களிடம் சொல்லிக் கொண்டிருக்கிறாராம்.

## குமுதம் விலை

விலைவாசி ஏற்றத்தைத் தடுக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று போராடி வந்திருக்கும் பத்திரிகைகள், காகிதப் பஞ்சம் காரணமாகப் பத்திரிகைகளின் விலையை உயர்த்த வேண்டிய கட்டாயத்தில் இருக்கின்றன. அடுத்த இதழ் முதல் குமுதம் பிரதியின் விலை 40 காசு. வேறு வழியில்லாதிருப்பது குறித்து வருந்துகிறோம்.

# ரகளை

தமது படம் முடிந்த கையோடு டைரக்டர் ஒருவர், நடிகர் ஒருவர் வீட்டிற்குச் சென்று, ''என்னாங்க, படத்தை முடித்து விட்டு இப்பொழுது நான் ஃப்ரியா இருக்கிறேன். நீங்கள் கால்ஷீட் கொடுத்தால் படத்தை முடித்துவிடலாம்.'' என்று பேச்சைத் துவக்கினாராம்.

''உங்களுக்கு டைம் கிடைத்தால் நான் கால்ஷீட் கொடுக்கணும்னு இருக்கா என்ன?'' என்று இடக்காகக் கேட்டாராம் நடிகர்.

''அப்படியில்லை. படத்தை ஆரம்பித்து ரொம்ப நாளாகிறது. முடித்து வெளியிட்டால் நன்றாக இருக்கும்,'' என்று டைரக்டர் கூற, ''இப்பொழுது என்றால் முடியாது. எனக்கு டைம் கிடைத்தால் சொல்லி அனுப்புகிறேன்,'' என்றார் நடிகர்.

''இப்படிச் சொன்னால் எப்படி? உங்களை நம்பி அந்தப் புது முகத்தை ஐந்து வருடம் ஒப்பந்தம் செய்தேன். நீங்கள் கால்ஷீட் கொடுக்காததால் அந்தப் பெண் நடிக்கும் படம் வெளிவராமலே போயிற்று. மற்றக் கம்பெனிக்காரர்கள் கேட்டதற்கும் அவளை நடிக்க அனுமதிக்கவில்லை. அந்தப் பெண்ணின் திரை வாழ்க்கையையே பாழாக்குகிறீர்களே!''

''என்ன சார், என்னால் தான் நீங்கள் இன்னும் இந்த ஃபீல்டில் இருக்கிறீர்கள். என்னையே குற்றம் சொல்கிறீர்களே! நான் நினைத்தால் உங்களை இருக்குமிடம் இல்லாமல் செய்துவிடுவேன். உங்களுக்கு வந்த வாழ்வே என்னால்தான்!''

''சினி ஃபீல்டிலே என்னை அழிப்பதற்கென்றே சிலர் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். உங்களுக்கும் அதுதானே எண்ணம்? உங்களை வைத்து முன்னே கலர் படம் எடுத்து என்ன கதியாயிற்று என்பது எனக்குத் தெரியும். இந்த ஃபீல்டில் இன்னும் நீங்கள் தலை நிமிர்ந்து நிற்பதற்கு நான் தான் காரணம். அப்படியிருக்க, நான் இந்த ஃபீல்டில் இருப்பதற்கு நீங்கள் தான் காரணமென்று கூறுவது எப்படிப் பொருந்தும்? என்னை அழிப்பதுதானே

(80'ம் பக்கம் பார்க்க)

# ஜெய் பத்ரி

பத்ரி அல்லது பதரி என்றால் இலந்தையாம். பத்ரிகா ஆசிரமத்தில் திருமால் தவமிருந்தபோது திருமகள் ஓர் இலந்தை மரமாகத் தோன்றி நிழல் கொடுத்ததாகச் சொல்கிறார்கள்.

மொத்தம் ஐந்து பத்ரி. பெரிய பத்ரி, 'விசால் பத்ரி' என்று அழைக்கப்படுகிறது.

சரித்திர காலத்துக்கு முற்பட்ட தலம் இது என்பது மூர்த்தியைப் பார்த்தாலே தெரிகிறது. பருமனான கற் பலகையில், இடுப்பளவுக்கு உள்ள ஓர் உருவம் தெரிகிறது. திருமுகம் தெளிவாக இல்லை. சந்தனத்தையும் வண்ணப் பூக்களையும் கொண்டு அலங்கரிக்கும் பூசாரியின் கைத்திறன், இடுப்பளவு உள்ள அந்த வடிவத்தை ஒரு பெரிய முகமாகத் தோற்றம் தருமாறு அமைத்துவிடுகிறது.

கேதார்நாத்தில் இறைவனது திருமேனியைத் தொட்டு அபிஷேகம் செய்ததைப் போல் இங்கு செய்ய இயலாது.

ஆண்டவனுக்கு நைவேத்தியம், பொரி, கல்கண்டு, சர்க்கரைக் கட்டி, உலர்ந்த பேரீச்சை, உடைத்த துவரம் பருப்பு ஆகியவைதான்.

பத்ரியில், பூஜை செய்யும் 'ராவல்' தென்னாட்டைச் சேர்ந்தவர்—நம்பூதிரி. ஆதிசங்கரர் காலத்திலிருந்து அப்படித்தானாம். தேசிய ஒருமைப்பாட்டுக்கு இதைவிட என்ன உதாரணம் வேண்டும்?

இரண்டு இரவும் ஒரு பகலும் பத்ரியில் இனிதே கழித்த பிறகு பத்ரி நாராயணனிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு ஊர் திரும்பினோம். யாத்திரையைப்பற்றி நினைக்கும்போது பல விஷயங்கள் ஞாபகத்துக்கு வருகின்றன.

ரிஷிகேசத்திலிருந்து கேதார் செல்லும் வழியிலும், பத்ரி போகும் பாதையிலும் பலபுனித தலங்கள் உண்டு. இறங்கிப் பார்க்கத்தான் நேரமில்லை. நேரே உச்சிக்குப் போய்விட்டு வந்துவிட்டோம்.—கல்யாணப் பத்திரிகையைத் தந்தியில் அடித்த மாதிரி.

அழைப்பை முழு விவரங்களோடு பத்திரிகையாகப் போட்டால் என்ன, சுருக்கமாகத் தந்தி கொடுத்தால் என்ன? கல்யாணம்,கல்யாணம் தானே? (எப்படி நம்ம ஆர்குமெண்ட்? வக்கீல் பிச்சை வாங்க வேண்டும்.)

பத்ரியில், கோவிலருகே உள்ள நான்கு வெந்நீர்க் குளங்களில் திளையும்போது ஏற்படும் சுகம். ஹரித்வாரில், பச்சிலைத் தொன்னையில் வண்ணப் பூக்கள் வைத்து மிதக்க விடப்படும் காட்சி...பத்ரி கோவிலில் அந்த இனிய ஸிதார் ஒலி... கேதார் பாதையில் குதிரைக்காரப் பையன்கள் சிரித்த சிரிப்பு...உடல் நலிவுற்ற பெரியவரின் உறுதியும் நோயின் சோர்வும் கலந்த முகபாவம்.. டிரைவர் சுர்வீர்சிங்கின் துணிவு நிறைந்த குரல்...மனிதன் கால் வைத்தறியாத நீலகண்ட சிகரத்தின் வெள்ளிப் பனிப் போர்வை, அனுமான் சட்டியில், 'கார் பழுதாகாவிட்டால் எங்கள் வீட்டில் தங்குங்கள்,' என்று அன்புடன் அழைத்த அந்தக் கிராமவாசியின் அன்பு... இருபது முப்பது தமிழர்கள் பத்ரியில் சந்தித்து, பண்டாக்களோடு பேரம் நடத்தியபோது ஏற்பட்ட ஐக்கிய உணர்ச்சி...'கேதார் மகராஜ்கி ஜெய்!' என்ற கோஷம்...'சட்டையை மாட்டிக் கொள்ளுங்கள். அதெல்லாம் இங்கே பார்க்க வேண்டாம். இந்தப் பிரதேசத்தில், வெறும் மார்போடு இருக்கக்கூடாது,' என்று எச்சரிக்கை செய்த புதுப் பெரியவர்களின் புன்னகை... போர்வை போதாமல் [illegible] குளிரில் நடுங்கிய நடுக்கம்...பீக்கா டீ.. குதிரைகள் வாயில் வெல்லக்கட்டி ஊட்டிய அனுபவம்...எத்தனை உணர்ச்சிகள், எத்தனை நிகழ்ச்சிகள்!

வேறு லாபம் ஒன்று உண்டு. அலட்சியமாகப் பார்க்கக்கூடியவர்கள் கூடக் கையெடுத்துக் கும்பிடுகிறார்கள்—கேதார் பத்ரி யாத்திரை போய் வந்தவர்களை வணங்கினால் அவர்களுக்குப் புண்ணியமாம்.

அந்தக் கும்பிடை வாங்கிக் கொள்வதற்காகவே இன்னொரு யாத்திரை போய்வரலாம் போலிருக்கிறது. அதே சமயம், ஒரு சம்பவத்தைக் குறிப்பிடாமல் இருக்கலாமா?

# ஜெய் கேதா

•ரவி

நண்பர் ஒருவர், ஒரு 35 எம். எம். காமெரா கொண்டு வந்திருந்தார். மனிதனுடைய ஞாபக சக்தி, பலவீனமானது. மறந்துவிட்டால் நல்லது (வாங்கிய கடன் முதலியவை) என்று நாம் கருதுபவையோடு, மறக்க முடியாதவை, மறக்கக் கூடாதவை—என்று எண்ணிக் கொண்டிருக்கும் எத்தனையோ அருமையான விஷயங்களும் மெல்ல மெல்ல நினைவினின்று நழுவிவிடுகின்றன. அவற்றைக் கைது செய்து திரும்ப நினைவு படுத்திப் பார்க்கப் புகைப்படம் உதவுகிறது.

...விசால் பத்ரி...

தவிர, சில சந்தேகப் பிராணிகள் உண்டு. 'நான் கேதார் போயிருந்தேன்., பிறகு பத்ரி நாராயணனைத் தரிசித்தேன்,' என்றால், 'யாரிடம் கதை விடுகிறாய்?' என்று கிண்டல் செய்யக்கூடியவர்கள். அவர்கள் வாயை அடைக்கப் போட்டோவைவிடச் சிறந்த பிஸ்திரி என்ன இருக்க முடியும்? நண்பர் நிறையப் படங்கள் எடுத்தார். குறிப்பாக, பத்ரி செல்லும் வழி [illegible] ஹேலாங் என்ற ஊருக்கருகே [illegible] பெரியவர்களைத் தரிசனம் செய்த போது பெரியவர்களை மட்டும் இரண்டு முறையும், அவர்கள் பாதத்தில் நாங்கள் வரிசையாக உட்கார்ந்து இரண்டு முறையும் எடுத்தார். இதேபோல பத்ரியிலிருந்து திரும்பி வரும்போது நேர்ந்த சந்திப்பின்போது சில படங்கள் எடுக்கப்பட்டன. யாத்திரை செல்கிறவர்கள் எல்லோரும் காமெரா வைத்திருப்பதில்லை. காமெரா வைத்திருப்பவர்களுக்கெல்லாம் படம் சரியாக விழுந்து விடுவதில்லை. சென்னை வந்ததும் பிலி சுருள்களைக் கழுவக் கொடுத்துவிட் ஆவலோடு காத்திருந்தோம். மொ தம் 102 படங்கள். அவற்றில் 9 தேறிவிட்டன. ஆசாரிய சுவாமிகள் ஒரு பாறையில் சாய்ந்து கொண் நிற்கிறாற்போன்ற காட்சி நன்ற விழுந்திருந்தது. ஒடுக்கமா வளைந்த பாதையில் பஸ்கள் ஒன்ற பின் ஒன்றாகவரும் அழகிய காட்சி தூரத்திலிருந்து பிடித்தது— சிற பாக வந்திருந்தது. இன்றை கேதார் ஆலயம், பத்ரி கோவி வாசல் எல்லாம் திருப்திகரமா பதிவாகியிருந்தன. தொண்ணூ றெட்டுப் படங்கள் எதிர்பார்த் தற்கு மேலாகவே அமைந்திருக் நான்கு படம் மட்டும் விழவில் புகைப்படம் 'புகைப்' படம் விட்டது. ஒரே கறுப்பு. 98 ப சரியாக இருந்தது குறித்து பட்ட மகிழ்ச்சியைக் காட்டி அந்த நான்கு படம் வி தால் ஏற்பட்ட ஏமாற்றம் அ கம்.

ஹேலாங்கிலும், அனுமா சட்டிக்கு இறங்கிவரும் வழியிலும் நாங்கள் பெருமையோடு புதுப் பெரி வர்களோடு எடுத்துக் கொண்டோ அந்த நான்கு படங்கள் மட்டும் விழ இல்லை. முன்னும் பின்னும் எடுத்தவை நன்றாக அமைந்திருக்க, அவை மட்டு விழாததன் காரணம் என்ன? புரி வில்லை.

பெரியவர்களோடு இருக்கு போதும், பெரிய லட்சியங்களோ தொடர்பு கொள்ளும் போதும் [illegible] ர்வு இருக்கக்கூடாது என [illegible] பதை எங்களுக்கு உணர்த்துவதற்கா இருக்குமோ?

(முற்றும்)

B.விட்டலாச்சாரியா

# பெண்ணை நம்புங்கள்

டைரக்ஷன்:
**B.V.சீனிவாசன்**

வசனம்: ஆரூர்தாஸ்
பாடல்கள்: வாலி
இசை: V.குமார்





சென்னை
குளோப்
சரவணா
ராம்
பிரைட்டன்
மற்றும்
தென்னாடெங்கும்